# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி – பங்குனி – 2018 – மார்ச்

கோவிலூர் ஆண்டவர் உடற்கல்வியியல் கல்லூரியில்
நடைபெற்ற கண் மருத்துவ முகாம் நிகழ்ச்சி



உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - பங்குனி - 2018 - மார்ச் இதழ் - 69

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்




# இறை வணக்கம்

ஆலத்தை உண்டசிவன் அம்மையப்பன் எனவிளங்கும்
அத்தனைக் கொற்றவாள் ஈசன் தன்னை
அழல்வடிவம் கொண்டானை ஆரூ ரானை
அம்பலத்தின் திருநடம் ஆடு வானைச்
சூலத்தைக் கையேந்தும் சொக்கன் என்னும்
சுந்தரனை ஒருபாகம் பெண்ணை வைத்த
சோதியினைக் காமனையே நெற்றிக் கண்ணால்
சுட்டெரித்த பெருமானை உலகு போற்றக்
காலத்தைக் கடந்தானைக் கழனி வாசல்
கண்டுவந்த கருத்தானை அகத்தி யர்க்குக்
கவின்தமிழைத் தானுரைத்த கயிலை யானைக்
கரியதளைத் தானுடுத்த காத லானை
வேலொத்த கண்ணாளை விரும்பி வந்த
வித்தகியைத் திருநெல்லை என்னும் மாதை
வினைபோக்கி நமைக்காக்க வேண்டு மென்று
வீற்றிருப்பாள் திருவடியை வேண்டு வோமே.

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்

மாதா, பிதா, குரு, தெய்வம் என்ற சொல் வழக்கு தமிழிலே மிகவும் பிரபலமானது, சிறப்பானது - தைத்திரிய உபநிஷத்தில் மாத்ரு தேவோ பவ 1 பித்ரு தேவோ பவ 1 ஆசார்ய தேவோ பவ 1 அதிதி தேவோ பவ 11 1.3 11 என்று சொல்லப்படுகிறது. இதிலே மாதா, பிதா, குருவுடன் அதீதிகளும் தெய்வமாக மதிக்கப்பட வேண்டியவர்கள் என்ற கருத்துச் சேர்ந்து இருக்கிறது. அதிதி என்பவர்கள் நம்முடைய உறவினர்களோ, அல்லது நமக்கு அறிமுகமானவர்களோ நம் வீட்டிற்கு வருவதும் உணவு படைப்பதும் அதிதி உபகாரம் என்று கருதப்பட மாட்டாது. அதிதி என்று அழைக்கப்படுபவர்கள் அறிமுகம் ஆகாத புதியவர்கள், வழிப்போக்கர்களாகவோ அல்லது இறைவனைத் தரிசிக்க வந்தவர்களாகவோ அப்படி வந்தவர்களை நம் இல்லத்துக்கு அழைத்து உணவு அளிப்பது, தேவையான வசதிகள் செய்வதே அதீதி உபசாரம் என்று சொல்லப்படும். போக்குவரத்து வாகன வசதி இல்லாத காலத்திலே இறைவழிபாட்டிற்கோ அல்லது வியாபாரம் நிமித்தமாகவோ வருகின்ற அதீதிகளுக்குத் தங்க இடம் கொடுத்து உணவு அளித்து அப்படி உபசாரம் செய்வதே அதிதி உபசாரம் என்று அழைக்கலாம். பெரியபுராணத்திலே இளையான்குடி மாறனார் போன்ற நாயன்மார்கள் இதைத்தான் தொண்டாகச் செய்தார்கள். இது ஒவ்வொரு இல்லத்தாரும் கடைப்பிடிக்க வேண்டிய கட்டாயக் கடமையாகும்.

தாய், தந்தை (மாதா, பிதா) நம்மால் தேர்ந்தெடுத்துப் பெற்றவர்கள் அல்ல. நம் பிறப்பு இறைவனுடைய அருளாலே நடக்கின்ற காரியம். மூன்றாவதாகச் சொல்லப்படுகின்றவர் குரு என்பவர். நாம் தேர்ந்தெடுத்துக் கொள்ளக் கூடிய வாய்ப்பு உள்ளது. முன்னர் ஒரு முறை நம்முடைய ஆசியுரையிலே குறிப்பிட்டிருந்ததைப் போலக் குருகுலக் கல்வியில் குரு சீடர் உறவு மேன்மையாகவும், நெறி முறைகளைப் போதிப்பதாகவும் நற்பண்புகளை வளர்ப்பதாகவும் அமைந்திருந்தது. ஆனால் இன்றையக் காலக் கட்டத்திலே பள்ளி, கல்லூரிகளில் ஆசிரியர்கள் - மாணவர்கள் உறவு வலுவுடையதாக

இல்லை. அதிலும் தற்போதுள்ள சட்ட திட்டங்களாலே மாணவர்களைக் கண்டிக்கவோ, தண்டிக்கவோ உரிமையும், வாய்ப்பும் இல்லாத காரணத்தாலே ஆசிரியப் பெருமக்கள் மிக்க வேதனைக்கு உள்ளாக்கப்படுகிறார்கள். அதிலும் மதிப்பெண்களே முக்கியமான காரணியாக (Factor) உள்ள தருணத்தில் மாணவர்களுடைய ஒத்துழையாமைக்கும் பெற்றோருடைய அழுத்தத்திற்கும் இடையில் மிக்க வேதனைப்படுகிறார்கள்.

மாணவர்களைப் படிக்க வைத்து, கற்பதிலே ஆர்வத்தைத் தூண்டிக் கற்பித்து, தேர்வு செய்து வெற்றிபெற வேண்டுமென்று நல்ல நோக்கத்தைக் கொண்ட ஆசிரியப் பெருமக்கள் அழுத்தத்திற்கும், சிரமத்திற்கும் ஆட்படுகிறார்கள். மாணவச் செல்வங்களுக்குச் சூழ்நிலைபுரியாத காரணத்தினாலே அக்கறையின்மை மேலும் சிரமத்தைக் கொடுக்கின்றது. கற்றுத்தான் தேர்வு எழுத வேண்டும் என்ற கட்டாயத்தைக் கொண்டிராத பள்ளிகளிலே இந்தச் சிரமங்கள் ஏற்படுவதில்லை.

மாணவர்களைத் தங்களுடைய பிள்ளைகளாக நினைத்துக் கற்பித்து முன்னேற வேண்டுமென்று எண்ணுகின்ற நல் ஆசிரியப்பெருமக்களுக்கு இன்றைய கல்வி முறையும் சட்ட திட்டங்களும் முழு மனநிறைவோடு கடமையைச் செய்வதற்கான சூழ்நிலை நன்றாக இல்லை. இக் காரணத்தினாலேயே உண்மையாகக் கற்பிக்க வேண்டுமென்று விரும்புகிற ஆசிரியப் பெருமக்கள் மிகமிகச் சிரமத்திற்கும் வருத்தத்திற்கும் ஆளாகிறார்கள்.

நம்மைப் பொருத்த மட்டிலே அப்படி நன்னெறிகளையும் பாடங்களின் அடிப்படைகளையும் அடிப்படை உண்மைகளையும் (Concept) புரியவைத்து ஐயம் திரிபறக் கற்பிக்கின்ற ஆசிரியர்களே குருமார்கள் என்று கருதுகிறோம். அப்படிப்பட்ட அனைத்து நல்ல குருமார்களுக்கும் நம்முடைய வாழ்த்துக்கள் பாராட்டுக்கள்.

*ஆசீர்வாதங்கள்!*

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## காதலாகிக் கசிந்து

டி.ஆர்.குருமூர்த்தி, பேராசிரியர் & துறைத்தலைவர்
வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி

நாம் செய்கின்ற ஒவ்வொரு பணியிலும் நமது ஈடுபாடு முழுமையாக இருக்க வேண்டும். செய்யும் பணியில் மனம் ஒன்றியிருக்க வேண்டும். கவனம் சிதறக்கூடாது. இவ்வாறான பணிகள் வெற்றியில் முடியும். மனமும் ஆனந்த நிலையில் இருக்கும். இறைவனை வழிபடும் போது மனம் இறைவனோடு ஒன்றியிருக்க வேண்டும். மனம் உருகப்பாட வேண்டும். மனம் இறைவன் மேல் அன்பு கொண்டு கசிந்து உருகவேண்டும். இத்தகு நிலையில் இறைவனைத் தொழுவார்க்கு நன்னெறி கிட்டும் என்பதைத் திருஞான சம்மந்தர் தமது தேவாரப் பதிகத்திலே விளக்குகிறார்.

***காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி***
***ஓதுவார் தமை நன்னெறிக்கு உய்ப்பது***
***வேதம் நான்கிலும் மெய்பொருள் ஆவது***
***நாதன் நாமம் நமச்சிவாயவே.***

வேதம் நான்கிலும் மெய்ப்பொருளாக விளங்கும் நாதனின் நாமம் நமச்சிவாயத்தில் லயித்து கசிந்து முகமெலாம் கண்ணீர் மல்கி நமச்சிவாயத்தைப் பாடுவார்க்கு நன்னெறியாகிய வாழ்வியல் நெறி அறநெறி, அருள்நெறி கிட்டும். ஓர் ஆசிரியர்க்கு, தாம் நடத்தும் பாடம் தான் வேதம். அந்த வேதத்தில் தன்னை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டு வேதத்தை உணர்ந்து படித்து ரசித்து ஆனந்தப் பரவசத்தில் ஆழ்ந்து அந்த நிலையில் அந்த வேதத்தை மாணவர்களுக்கு ஓதிச் சொல்லித்தரும் போது நன்னெறி அவர்க்குக் கிட்டுகின்றது. நன்னெறியில் திளைக்கும் ஆசிரியராகின்றார். இதே தத்துவம் ஒவ்வொருவரின் பணியிலும் பயன்பாட்டில் இருந்தால் பணியும் சிறக்கும். பணிசெய்வோரும் சிறப்படைவார்கள். திருஞானசம்பந்தரின் கருத்தை ஒட்டி அமைந்திருக்கும் திருவாசகப் பாடலையும் நாம் கீழே காணலாம்.

*மெய்தான் அரும்பி விதிர்விதிர்த் துன்விரை யார்கழற்கென்*
*கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பியுள்ளம்*
*பொய்தான் தவிர்த்துன்னைப் போற்றி சயசய போற்றியென்னும்*
*கைதான் நெகிழ விடேன் உடை யாயென்னைக் கண்டு கொள்ளே*

இரும்பு உருகினால் பயன்படுத்தத்தக்க பொருட்கள் கிடைக்கின்றன. தங்கம் உருகினால் அழகிய ஆபரணங்கள் கிடைக்கின்றன. பாறை செதுக்கப்பட்டால் அழகிய சிற்பங்கள் கிடைக்கின்றன. மூங்கில் இசைக்கு உருகுகின்றபோது புல்லாங்குழல் கிடைக்கின்றது. மரம் செதுக்கப்படும் போது மரப்பொருட்கள் கிடைக்கின்றன. ஒவ்வொரு பொருளும் உருகுகின்றபோது உலகிற்குப் பெரிதும் பயன்படுகின்றது. அதுபோல மனிதமனம் உருகினால் மனிதன் மட்டுமல்ல. உலகமும் பயனடையும்; சமூக கலாச்சாரம் சுற்றுச்சூழல் சார்ந்த அல்வினைகள் அகலும். நமச்சிவாயவே ஞானமும் கல்வியும் என்று சொன்ன திருநாவுக்கரசர்.

*உள்ளம் உல்கி உகந்து சிவனென்று*
*மெள்ள உல்க வினைகெடும் மெய்ம்மையே*

எனச் சொல்லியுள்ளார்.

உள்ளத்தில் சிவத்தை நினைத்து உகந்து உருகி சிவாயநம எனச்சொல்லி வணங்கிடும் போது நம்மைத் துன்புறுத்தும் வினைகள் அகன்றுவிடும் என்பது உண்மை. உள்ளத்தில் உண்மையான உருக்கம் இருப்பின் நல்லதே நடக்கும். உள்ளத்தாற் பொய்யாது ஒழுகின் உலகத்தார் உள்ளத்துளெல்லாம் உளன் என்கிற திருக்குறளும், உள்ளம் பெருங்கோயில் என்கிற திருமந்திரமும் இங்கே நினைவு கூரத்தக்கது.

இறைவன் திருவடியை நினைத்துக் காதலாகி உளம்உருகிக் கண்ணீமல்கி இருக்கின்ற நிலையில், தவங்கள் பெருகும். பேதமை தீரும். முரண்பட்ட சிந்தனைகள் நம் மனத்தைவிட்டு அகலும். வாழ்வில் ஆனந்தம் ஏற்படும் என்பதனைத் திருநாவுக்கரசர் தந்துள்ள

கீழ்க்காணும் தேவாரம் உணர்த்துகின்றது.

*பெருகலாம் தவம் பேதமை தீரலாம்*
*திருகலாகிய சிந்தை திருந்தலாம்*
*பருகலாம் பரமாயதோர் ஆனந்தம்*
*மருகலான் அடி வாழ்த்தி வணங்கவே.*

மனிதன் இறைவனுக்குத் தொண்டனாகும் போது இறையருள் கிடைக்கிறது என்கிற பாடத்தைச் சேக்கிழார் வடிவமைத்துள்ள திருத்தொண்டர்புராணம் சொல்கின்றது. ஒவ்வொரு வேலை செய்பவரும் தாம் செய்கின்ற வேலைக்குத் தம்மை அர்ப்பணித்துக்கொண்டு, வேலைக்குத் தாம் தொண்டனாகி, தன் மனம் திருப்தி அடையும்படியாக வேலை செய்கின்ற போது, மனஅமைதியும் ஆனந்தமும் கிட்டும். தமது பணிக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொள்ள வேண்டும்; அப்போது பணியில் உயர்வும் உண்டு; பதவியும் உண்டு. இதனைத் திருநாவுக்கரசர் கீழ்க்காணுமாறு விளக்குகின்றார்.

*தொண்டராகித் தொடர்ந்து விடாதவர்க்கு*
*அண்டம் ஆளவும் வைப்பார் ஆரூரரே*

உள்ளம் கசிந்து இறைவனைத் தொழுகின்ற போது வல்வினைகள் நம்மை நெருங்காது. உள்ளம் தூய்மையாகும். தீயவினைகளுக்கு இடமில்லை. இத்தகு அறநெறி இறையருளால் கிட்டும். இறைநெறி என் சிந்தையுள்ளும் சிரத்துள்ளும் தங்க என்னதவம் செய்தேன் என்பதை அப்பர் தெரிவிக்கின்றார். மனம் கனிந்து உருகிக் கண்களில் நீர்மல்க இறைவனைப் போற்றுபவர்கள் மனிதரில் தலையாய மனிதராவார். மனிதகுலத்தில் மாண்பினைப் பெற்ற உயர்ந்தவர் ஆவார். இத்தகு மேன்மைமிகு அறநெறிகளைக் கீழ்க்காணும் தேவாரப்பாடல்கள் விளக்குகின்றன.

*மணங்கொள் பூம்பொழில் அரிசிலின்*
*வடகரை வருபுனல் மாகாளம்*

*வணங்கும் உள்ளமொடு அணைய வல்லார்களை*
*வல்வினை அடையாவே*

*எந்த மாதவம் செய்தனை நெஞ்சமே*
*பந்தம் வீடு அவையாய பராபரன்*
*அந்தமில் புகழ் ஆரூர் அறநெறி*
*சிந்தை உள்ளும் சிரத்துளும் தங்கவே*

*அனுசயப் பட்டது இது என்னாதே*
*இனிமனத்தொடு கண்களும் நீர்மல்கிப்*
*புனிதனைப் பூவனூரானைப் போற்றுவார்*
*மனிதரில் தலையாய மனிதரே*

புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா உன்னடி என்மனத்தே
வழுவாது இருக்க வரம்தரவேண்டும்

சுந்தரமூர்த்தி நாயனார் தமது தேவாரப்பாடலில், பண்ணில் தமிழாக இருப்பவன் இறைவன், பழங்களில் சுவையாக இருப்பவன் இறைவன். கண்ணின் மணியாகவும், கருஇருளில் ஒளிதரும் சுடராகவும் இருப்பவன் இறைவன். இத்தகு இறைவன் மண்ணில் வாழ்கின்ற அடியார்களுக்கு எவ்வித இடரும் மனத்தில் வராமல் காப்பான் என்பதைக் கீழே தரப்பட்டுள்ள தேவாரப்பாடலில் விளக்குகின்றார்.

*பண்ணிடைத் தமிழொப்பாய் பழத்தினிற் சுவையொப்பாய்*
*கண்ணிடை மணியொப்பாய் கடுவிருள் சுடரொப்பாய்*
*மண்ணிடை அடியார்கள் மனத்திடர் வாராமே*
*விண்ணிடைக் குருகாவூர் வெள்ளடை நீயன்றே*

திருவேட்களத்து பொற்சடையானை உளம் உருகித் தொழுவது நல்லது. நமது அல்வினைகள் எல்லாம் நம்மைவிட்டு நீங்கும். வாழ்வில் எபபொழுதும் இன்பம் தழைத்து இருக்கும் என இறையருள் பெருமையினைத் திருநாவுக்கரசர் விளக்குகின்றார்.

*நன்று நாள்தொறும் நம்வினை போய்அறும்*
*என்றும் இன்பம் தழைக்க இருக்கலாம்*

*சென்றுநீர் திருவேட்களத்து உள்ளுறை*
*துன்று பொற்சடையானைத் தொழுமினோ*

காதலாகிக் கசிந்து முகமெலாம் கண்ணீர்மல்கப் பணிந்து வணங்கும் தொண்டனின் மனமே இறைவனது கோயில் எனத் திருநாவுக்கரசர் தமது பாடலில் விளக்குகின்றார்.

*சகமலாது அடிமை இல்லை தானலால் துணையும் இல்லை*
*நகமெலாம் தேயக்கையால் நாள்மலர் தொழுதுதூவி*
*முகமெலாம் கண்ணீர்மல்க முன்பணிந்து ஏத்தும் தொண்டர்*
*அகமலால் கோயில் இல்லை ஐயன் ஐயாறனார்க்கே*

இறைவா இந்த உலகம் முழுவதும் உமக்குக்கீழ் உள்ளது. உன்னையன்றி வேறொரு துணை இல்லை என நினைத்துத் தமது நகமெலாம் தேய இறைவனின் திருவடிகளுக்கு மலர்கள் தூவி இறைவன் மீது உருகிக் கண்ணீர் மல்கி முகமெலாம் கண்ணீர் ததும்பி இறைவன் முன்பணிந்து வணங்கும் தொண்டனின் அகமலாது, உள்ளம் அலாது திருவையாறில் உறையும் ஐயாறப்பனுக்குக் கோயில் எது எனத் திருநாவுக்கரசர் விளக்குகின்றார்.

இவ்வாறு மனம் உருகித் தொழுபவர் மனமே கோயில் என்று இறைவன் குடிகொள்வதால், இறைவனைத் தினைத்தனைப் பொழுதும் மறந்து வாழ்வனோ என அப்பர் தமது பக்திநிலையினை விளக்குகின்றார். எந்நாளும் இறைவனை நினைக்க வேண்டும் என வலியுறுத்துகின்றார்.

*பனைக்கை மும்மத வேழம் உரித்தவன்*
*நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்*
*அனைத்தும் வேடமாம் அப்பலக் கூத்தனைத்*
*தினைத்தனைப் பொழுதும் மறந்து உய்வனோ*

இறையருளையும் இறையருளின் பயனையும் அருளாற்றலையும் இறைவன் மீது காதலாகிக் கண்ணீர் மல்கியிருக்கும் அடியார்கள் உணர்கின்றார்கள். கற்றுணைப்பூட்டி ஓர் கடலினில் பாய்ச்சினும்

நற்றுணையாவது நமச்சிவாயவே என அப்பர் எழுதியது நினைவு கூரத்தக்கது. நமச்சிவாயத்தின் அருளாற்றலைக் கீழ்க்காணும் அப்பர் வரிகளில் காணலாம்.

*நாவினுக்கு அருங்கலம் நமச்சிவாயவே*
*பண்ணிய உலகினிற் பயின்ற பாவத்தை*
*நண்ணி நின்றழிப்பது நமச்சிவாயவே*
*அடுக்கற்கீழ்க் கிடக்கினு மருளின் நாமுற்ற*
*நடுக்கத்தைக் கெடுப்பது நமச்சிவாயவே*
*குலமிலராகிலும் குலத்துக் கேற்பதோர்*
*நலமிகக் கொடுப்பது நமச்சிவாயவே*
*நன்னெறியாவது நமச்சிவாயவே*
*நமச்சிவாயப்பத்து ஏத்தவல்லார் தமக்கு*
*இடுக்கண் இல்லையே*

வெப்பமாய்ச் சுடுகின்ற சுண்ணாம்பு நீற்றின் காளவாசலில் அப்பர் பெருமான் அடைக்கப்பட்டுத் துன்பத்தினைச் சந்திக்க நேர்ந்த போது, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி இறைவனைத் துதித்ததன் விளைவாகத் துன்பம் எவ்வாறு இன்பமாக மாறியது என்பதைக் கீழ்க்காணும் பாடலில் காணலாம்.

*மாசில் வீணையும் மாலை மதியமும்*
*வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்*
*மூசுவண்டறைப் பொய்கையும் போன்றதே*
*ஈசன் எந்தை இணையடி நீழலே*

செய்யும் தொழிலே தெய்வம் என எண்ணி அத்தொழிலுக்கு நம்மை முழுமையாகக் காதலாகிக் கசிந்து அர்ப்பணித்துக் கொணடால், நாம் நம்மை இறைவனுக்கு அர்ப்பணித்துக் கொண்டதாகப் பொருளாகும். நமது திறமையும் வளரும். நம்மை நாம் உணர்வோம். நம்மை உலகமும் உணரும். வாழ்க வளமுடன்.

*சிவாய நம*

*திருச்சிற்றம்பலம்*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

**(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)**

முதல்வன் முறையீடு யாக்கை நிலையாமையை உணர்ந்த பட்டினத்தார் இறைவனிடம் முறையிடுவதான கருத்தமைந்த பாடல் மேற்கண்ட தலைப்பில் அமைந்துள்ளது. திருவெண்காடராகிப் பின்னர் பட்டினத்தாராகி ஞானம் பெற்றபின் இவ்வாறு முறையிடுகின்றார். பிள்ளையில்லாக் குறையைப் போக்க வந்த மருதவாணராகிய இறைவன் காதற்ற ஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே என்ற ஒரு வரியைக் கூறி நிலையாமை உணர்த் தியதும் துறவு பூண்ட பட்டினத்தார் இறைவனிடம் முறையிடுகின்றார்.

கன்னிவனம் என்பது மதுரையைக் குறிப்பது. அந்தத் தலத்திலுள்ள இறைவனை நோக்கி முறையிடுகின்றார். துன்பம் எங்கிருந்து தொடங்கியது என்ற மூலத்தை நான் அறியேன். அது எங்கே எப்படி முடியும் என்பதையும் அறியேன். இவ்வுலகில் யான் பட்ட துயர் மிக அதிகம். துன்பம் என்னைத் தொடர்ந்து கொண்டே வருகின்றது. அந்தக் கண்ணிகள் கீழே

*கன்னிவன நாதா! - கன்னிவன நாதா!*
*மூலம் அறியேன் முடியும் முடி(வு) அறியேன்*
*ஞாலத்தில் பட்டதுயர் நாட நடக்குதடா*

அறியாமை என்னும் குற்றத்தால் என்னுடைய அறிவு கெட்டுவிட்டது. என்னைத் தொடர்ந்த தீவினையின் பயனால் எனக்குப் பித்துப் பிடித்துவிட்டது.

அறியாமை யாம்மலத்தால் அறிவு முதல் கெட்டதடா! பிறியா வினைப்பயனால் பித்துப் பிடித்ததடா; தனுகரண புவனங்கள் போகங்கள் எனப்படும் நான்கினால் நான் மயக்கம் அடைந்தேன். அந்த வலையில் நான் அகப்பட்டுவிட்டேன்.

*தனுவாதி நான்கும் தானாய் மயங்கினண்டா*
*மனுவாதி சத்தி வலையில் அகப்பனண்டா*
*மாயை என்கின்ற பெருங்காட்டில் அகப்பட்டு அலைகின்றேன்*
*மாமாயை என்னும் வனத்தில் அலைகிறேண்டா*
*தாமாய் உலகனைத்தும் தாது கலங்கிறண்டா*

கன்னிவனமாகிய மதுரையில் இருக்கும் பெருமானே! மண்ணாசைப்பட்ட என்னை மண் உண்கின்றது. பெண்ணாசையும் என்னை விட்டுப் போகமாட்டேன் என்கின்றதே. மாந்தரிடம் மண்ணாசை பெண்ணாசை பொன்னாசை ஆகிய மூன்றும் வந்தால் அவற்றை விரும்பிச் சேர்த்தாலும் அவற்றை இறுதிக்காலத்தில் கொண்டு செல்ல முடியாது; அவற்றை விட்டுவிட்டுத்தான் செல்ல வேண்டும் என்பதே இதன் உட்பொருள்.

*கன்னிவன நாதா கன்னிவன நாதா!*
*மண்ணாசைப் பட்டேனை மண்ணுண்டு போட்டதடா*
*பொன்னாசை பெண்ணாசை போகேனே என்குதே*

மக்கள் சுற்றம் ஆகியவற்றின்மேல் கொண்ட ஆசையை என்னால் மறக்க இயலவில்லையே. உலக இன்பங்களின் மேல் கொண்ட ஆசையும் தீர மாட்டேன் என்கின்றதே. திசைகள் அனைத்தையும் ஆள வேண்டும் என்ற ஆசையும் தீர மறுக்கின்றதே.

*மக்கள் சுற்றத் தாசை மறக்கேனே என்குதே*
*திக்கரசாம் ஆசையது தீரேனே என்குதே*

மாய வித்தைகளைக் கற்கின்ற ஆசையினை விட்டொழிக்க முடியவில்லையே. சித்துகளைக் கற்கும் ஆசையும் சிதைய மறுக்கின்றது.

*வித்தைகற்கும் ஆசையது விட்டொழியேன் என்குதே*
*சித்து கற்கும் சிதையேனே என்குதே*

ஐந்து புலன்களையும் அடக்க நினைத்தாலும் அவை அடங்க மறுக்கின்றதே. அதனால் என் மனம் தவிக்கின்றது. தெளியவும் மறுக்கின்றது.

*ஐந்து புலனும் அடங்கேனே என்குதே*
*சிந்தை தவிக்கிறது தேறேனே என்குதே*

காமம் குரோதம் ஆகியவற்றைக் கடக்க இயலவில்லை. நாமே அரசு என்று நாள்தோறும் எண்ணுகின்றதே.

காமக் குரோதம் கடக்கேனே என்குதே நாமே அரசென்று நாள்

தோறும் எண்ணுதே அச்சம் ஆணவம் ஆகியன அடங்க மறுக்கின்றதே. மானஉணர்ச்சி நீங்க மறுக்கின்றதே.

*அச்சம் ஆங்காரம் அடங்கேனே என்குதே*
*கைச்சும் இன்னும்மானம் கழலேனே என்குதே*

நீர்க்குமிழி நிலையாதது போல நிலையற்ற இவ்வுடலை நிலையானது என்று எண்ணுகின்றதே. ஆர்ப்பரிக்கும் உயிர்மேல் கொண்ட ஆசை அழிய மறுக்கின்றதே.

*நீர்க்குமிழி ஆம்உடலை நித்தியமாய் எண்ணுதே*
*ஆர்க்கும் உயிராசை அழியேனே என்குதே*

கண்ணுக்கு எதிரே உடலானது கட்டையில் வேகக் கண்டும் நாம் நிலையாக இருப்போம் என்று எண்ணுகின்றதே.

*கண்ணுக்குக் கண்எதிரே கட்டையில்*
*எண்ணும் திரமாம் இருப்போம் என்றெண்ணுதே*

நிலையில்லாத ஒன்றை நிலையானது என்று எண்ணி அதையே ஆதாரமாக எண்ணுகின்றதே; தனிமையில் இருக்கவும் மறுக்கின்றதே. தன்னை மறந்திருக்கும் மோனநிலையில் இருக்கவும் மறுக்கின்றதே.

அநித்தியத்தை நித்தியம் என்றாதரவாய் எண்ணுதே தனித்திருக்கேன் என்குதே தனைமறக்கேன் என்குதே கொடிய நரகக் குழியில் அதை ஏற்பேன் என எண்ணுகின்றதே. பாம்பின் படம் போன்ற அல்குலையுடைய பெண்ணின் மேல் கொண்ட ஆசை என்னைக் கெடுப்பேன் என்கிறதே.

*நரகக் குழியும் இன்னுநான் புசிப்பேன் என்குதே*
*உறகப் படத்துஅல்குல் எனைக்கெடுப்பேன் என்குதே*

தெங்கின் குரும்பை போன்ற பெண்ணின் மார்பகங்கள் என் குடியைக் கெடுப்பேன் என்கின்றதே. அவர்களுடைய அரும்பு விழிகள் என் உயிரை உண்பேன் என்கின்றதே.

*குரும்பை முலையும் குடிகெடுப்பேன் என்குதே*
*அரும்பு விழியும் என்றன்ஆவி உண்பேன் என்குதே*

வஞ்சக எண்ணத்தோடு பெண் உருவில் எமன் என்னைக் கொல்ல

எண்ணுகின்றதே. எவ்வித ஆதரவும் இன்றி அரக்குப் போல் மனம் உருகுகின்றதே.

*மாதர் உருக்கொண்டு மறலிவஞ்சம் எண்ணுதே*
*ஆதரவும் அற்றுஇங்கு அரக்காய் உருகுறண்டா*

கந்தனைப் பெற்று அருள்செய்யும் கன்னிவன நாதா நான் எவ்விதம் இவற்றில் இருந்து கரையேறுவேன்?

கந்தனை ஈன்றருளும் கன்னிவன நாதா! எந்த விதத்தில் நான்ஏறிப் படருவண்டா கன்னிவன நாதனே நான் அற்பமான புல்லாய்ப் பிறந்து காய்ந்து போன நாள் போதாதோ? கல்லாகவும் மரமாகவும் பிறந்து கழிந்தநாள் போதாதோ?

கன்னிவன நாதா கன்னிவன நாதா புல்லாகிப் பூடாகிப் புலர்ந்தநாள் போதாதோ கல்லாய் மரமாய்க் கழிந்த நாள் போதாதோ கீரியாகவும் புழுவாகவும் பிறந்து கெட்டநாள் போதாதோ? நீரில் பிறந்தும் நிலத்தில் ஊர்வனவாயப் பிறந்தும் நின்றநாள் போதாதோ?

கீரியாய்க் கீடமாய்க் கெட்டநாள் போதாதோ நீரியாய் ஊர்வனவாய் நின்றநாள் போதாதோ பூதமாய்த் தேவராய்ப் போனநாள் போதாதோ, பிறருக்குத் துன்பம் செய்பவரான அரக்கராய் அழிந்தநாள் போதாதோ? புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகி, கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய் வல்லசுரராகி முனிவராய்த் தேவராய் எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் என்ற மாணிக்க வாசகரின் சிவபுராண வரிகள் நினைவுகூரத் தக்கது. பூதமொடு தேவருமாய்ப் போனநாள் போதாதோ வேதனைசெய் தானவராய் வீழ்ந்தநாள் போதாதோ அன்னையர் பலருடைய வயிற்றில் பிறந்து கழிந்தநாள் போதாதோ? அரசர்க்கு நிகராக வாழ்ந்து இறந்தநாள் போதாதோ?

அன்னை வயிற்றில் அழிந்தநாள் போதாதோ மன்னவனாய் வாழ்ந்து மரித்தநாள் போதாதோ பல பிறவிகளில் பலருக்குத் தாயாகவும் மனைவியாகவும் பிள்ளையாகவும் கணவனாகவும் கழித்தநாள் போதாதோ.

தாயாகித் தாரமாய்த் தாழ்ந்தநாள் போதாதோ சேயாய்ப்

புருடனுமாய்ச் சென்றநாள் போதாதோ நோயால் வாடி உணவையும் மறந்து துயருற்ற நாள் போதாதோ பேய்கள் உண்ணுமாறு நானும் ஒரு பேயாகப் பிறந்து துன்பப் பட்ட நாள் போதாதோ.

*நோய்உண்ண வேமெலிந்து நொந்தநாள் போதாதோ*
*பேய் உண்ணப் பேயாய்ப் பிறந்தநாள் போதாதோ*
*அழியும் உடலைப் பெற்றும் கூன் குருடாய்ப் பிறந்தும் வாடிய நாள்*
*போதாதோ இழிந்த பிறவி எடுத்து இளைத்த நாள் போதாதோ?*

ஊனவுடல் கூன்குருடாய் உற்றநாள் போதாதோ ஈனப் புசிப்பில் இளைத்தநாள் போதாதோ? கன்னி வனத்து இறைவனே! இவ்வுலகில் எதுவும் நிலைக்காது என்பதை அறிந்தும் அதற்காக அழுதநாள் போதாதோ

*கன்னிவன நாதா கன்னிவன நாதா*
*நில்லாமைக்கே அழுது நின்றநாள் போதாதோ*
*எல்லாரும் என்பராம் எடுத்தநாள் போதாதோ*

மன்மதனின் கணையால் நான் துயருற்று வருந்திய நிலை போதாதோ காமனின் கைகளில் அகப்பட்டுத் துன்புற்ற தன்மையும் போதாதோ?

*காமன் கணையால் கடைப்பட்டால் போதாதோ*
*ஏமன் கரத்தால்நாளும் இடியுண்டல் போதாதோ*

நான்முகன் நமக்கு எழுதிய வாழ்நாள் ஓலை முடிவுற்ற தன்மை போதாதோ? தேன் பொருந்திய துளசி மாலை அணிந்த திருமாலின் சக்கரப் படையால் அழிந்தநாள் போதாதோ?

*நான்முகன் பட்டோலை நறுக்குண்டால் போதாதோ*
*தேன்துளபத் தான்நேமி தேக்குண்டால் போதாதோ*

அழிக்கும் தொழிலையுடைய சங்கரனால் பட்ட துன்பம் போதாதோ? என்னுடைய துன்பத்தை இறைவனே! நீ அறியாமல் என்னை அழைத்தாயே!

*உருத்திரனும் சங்காரத்து உற்றநாள் போதாதோ*
*வருத்தம் அறிந்தையில்லை வாவென்று அழைத்தனையே*

கன்னிவனத்து இறைவா! பலவாறு பிறக்கும் என் நிலைமையினைத் தவிர்க்காமல் இருக்கின்றாயே! இறக்கும் தன்மையையும் நீக்கினாயில்லை. அதற்கான காரணம் என்னவென்று கேட்டாயில்லை.

*கன்னிவன நாதா கன்னிவன நாதா*
*பிறப்பைத் தவிர்த்தையிலை பின்னாகக் கொண்டையிலை*

இறப்பைத்தவிர்த்தையிலை என்னவென்று கேட்டையிலை பந்த பாசங்களை நீக்கினாயில்லை. அதனால் ஏற்படும் துன்பத்தையும் நீக்கினாயில்லை. நான் அணியும் திருநீற்றை வேடம் என்று அறிந்தாயில்லை.

*பாசம் எரித்தையிலை பரிதவிப்பைத் தீர்த்தையிலை*
*பூசிய நீற்றைப் புனைஎன்று அறிந்தையிலை*

இவ்வாறு நிலையாமை குறித்தும் பிறந்தும் இறந்தும் அதாவது பிறவி பல எடுத்தும் அவ்வாறு பிறந்து பின் இறந்தும் போகின்ற நிலைமை கண்டு தொடர்ந்து வருவதையே பலவாறு பாடிச் செல்கின்றார்.

*(தொடரும்...)*

## பட்டினத்தார் பைந்தமிழ் - 14

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

பைந்தமிழ்ப் பட்டினத்துச் சுவாமிகளைத் தாயுமான சுவாமிகள் பாரனைத்தும் பொய்யெனவே பட்டினத்துப் பிள்ளையைப் போல் ஆரும் துறக்கை அரிது அரிது என்றும் ஓட்டுடன் பற்றின்றி உலகனைத்தும் துறந்த செல்வப் பட்டினத்தார் விதந்தோதியுள்ளார். இப்போற்றுதலில் பட்டினத்தாரின் இருவேறு வாழ்க்கை பற்றிய குறிப்பு உள்ளது.

அவர் முற்றும் துறந்த துறவி என்பது வெளிப்படையாகத் தெரிந்தாலும் துறவியாக ஆவதற்கு முன் இல்லறத்தாராக இருந்தவர் என்ற குறிப்பு மறைமுகமாகச் சுட்டப்பட்டுள்ளது. செல்வப் பட்டினத்தாராக என்பதால் மிகுந்த செல்வந்தராக வாழ்ந்து பின் திருவோட்டை மட்டும் உடையவராக வாழ்ந்தார் என்பதால் தமிழரின வாழ்வியலின் படி இல்லறத்தில் இருந்து துறவறம் பூண்டார் எனத் தெரிகின்றது.

இந்த இருபெரும் வாழ்வைத் தாமே வாழ்ந்ததால் பட்டினத்தார் தாம் பாடிய திருவிடை மருதூர் மும்மணிக் கோவையின் 7ஆம் பாடலை இல்லற, துறவற வாழ்வியலுக் கேற்ப நீண்ட நெடிய 65 அடிகளால் பாடியுள்ளார்.

வாழ்ந்தனம் என்று வாழ்ந்தவர்க்குதவாது எனத் தொடங்கி மின்னின் அனையதன் செல்வத்தை விரும்பி வாழும் வாழ்க்கையையும் (1-34) என்பது வரை உலகியல் வாழ்வைச் சுட்டும் பட்டினத்தார் நனைமலர்ந்து யோசனை கமழும் எனத் தொடங்கிப் பல்லுயிர் அனைத்தையும் ஒக்கப் பார்க்கும் தொண்டர் வாழ்வும் (35-55) என இருவேறு வகையில் பாடியுள்ளார்.

உலக இல்லற வாழ்வானது தோன்றி மறையும் மின்னலே போல நிலையாத செல்வத்தால் செருக்குடன் வாழும் இயல்புடையது. பிறரைப் பாராட்டி மகிழும் பண்பில்லாமல் தம்மைத்தாமே உயர்வாகத் தம்பட்டம் அடித்துக் கொள்ளும் தற்பெருமையானது. செல்வம் இருந்தும் பிறர்க்கு ஈந்து மகிழும் வகை அறியாதது. கண்டதே காட்சி கொண்டதே கோலம் என்பதாக வாழும் அற்பம் நிறைந்தது என்பது கருத்து.

நாச்சுவை விரும்பி வகை வகையான உணவுகளைச் செய்து உண்பதற்காகவே வாழ்வு என மயங்கி வாழும் கொடுமை உடையது. மேலும் எதையும் அனுபவித்தே வாழ்வது எனக் காம இச்சைகளால் பிற பிற இன்பங்களைத் துய்த்துப் பழியைத் தேடிக்கொள்ளும் பான்மை உடையது.

பெரியோர் இருக்கச் சிறியோருடன் நட்புக் கொள்வது மற்றும் தாய் தந்தையரைத் தக்காங்கு பேணிப் பாதுகாவாத பழிப்புடன் வாழ்வது போன்ற பயனில்லாத கூறுகள் மிகுதியும் கொண்டதாகப் பட்டினத்தார் உலக வாழ்வை மதிப்பீடு (விமர்சனம்) செய்துள்ளார்.

இங்ஙனம் பலவாகக் கூறியதில் நாச்சுவையும் காமச்சுவையும் பற்றிக் கூறும் பொல்லாங்கைப் பட்டினத்தார் மேலாகக் கூறினார் இல்லை என்றே கூறலாம் போல் உள்ளது. “உண்டிப் பொருட்டால் கண்டன வெஃகி அவியடு நாக்குச் சுவைபகர்ந்து ஏவி ஆரா உண்டி அயின்றன ராகித் தூராக் குழியைத் தூர்த்து” இத்தொடர்கள்

உண்பதற்காக இந்த மனிதப் பிறவி எடுத்தது போன்ற குறிப்பை உணர்த்தும் அவலத்தைப் பறை சாற்றுகின்றன. வாழ்வதற்காக உண்ணலாமே அன்றி உண்பதற்காகவே வாழ்க்கை இல்லை Eat to live not live to eat என்பதை உணராமல் வாழ்வதைப் பட்டினத்தார் வெறுத்துரைத்தார். இந்த நாச்சுவை தவிராது வாழும் அவலம் இன்று நாடெங்கிலும் பரவி விட்டது. இதனால் உடல் கோளாறு எழுவதால் உள்ளக் கோளாறும் எழும் என்ற எச்சரிக்கையைக் கூறி அடுத்துக் காம இச்சையைக் கூறுவதன் மூலம் பட்டினத்தார் கூறுவது நேர்த்தியான பைந்தமிழ்க் கருத்தாக உள்ளது. தன்மனையாள் இருக்கப் பிற உணர்வில் சிற்றின்பம் துய்க்க விரும்பித் தாமே கெடுத்துக் கொள்வது பாவமானதாகும். காம இச்சையைத் தூண்டுவோர் எள்ளுக்கேற்ற எண்ணெய் போலப் பொருளுக்கே ஆசைப்படுபவர் என்பதால் அச்சிற்றின்பத்தை வெறுத்து வாழ்தல் வேண்டும் என்கிறார் பட்டினத்தார். எள்ளுக்கேற்ற எண்ணெய் போலத் தள்ளாது போகம் விற்றுண்ணும் அருளில் மடந்தையர் எனச் சாடுவதன் மூலம் இல்லறத்தை நேர் சீராக வாழ்தல் அரிதினும் அரிது என்கிறார் என்பதாகும். ஆக உலக இல்லற வாழ்வானது மிக எச்சரிக்கையானது எனக் கூறியதற்குப் பிறகு துறவற வாழ்வையும் மிகமிக எச்சரிக்கையானது என்கிறார் பட்டினத்தார். பலகாத தூரம் மணம்பரப்பும் நீலோற்பல மலர் பூக்கும் தடாகம் நீர் வளம் மிக்கதற்கேற்ப அன்னப் பறவைகள் தம் குஞ்சுகளுடன் திரியும் இடமாகவும் மீன்களின் வளமும் நிலையாகவும் உள்ள குளமும் காவிரி பாயும் சூழலும் மிக்க திருவிடை மருதூரில் வாழும் மருதவாணனே! வேதங்களாலும் அறிய முடியாத பரம்பொருளே! அழியும் செல்வத்தை வெறுத்து நிலையான நினது திருவருட் செல்வமே செல்வம் என வாழும் எளிய கந்தை உடுத்தியும் வாழும் வாழ்க்கையோடு பித்தர்போல உண்டு திரியும் துறவு வாழ்க்கை செல்வ வாழ்க்கை எனக் கருதும் அடியார் வாழ்வைப் பட்டினத்தார் கூறுகிறார்.

இங்ஙனம் இருவேறு வாழ்வையும் சமமாகப் பார்க்கும் பார்வையில் பட்டினத்தார் கூறுவது சிறப்பாக உள்ளது. உலக வாழ்க்கையும் அடியார் வாழ்க்கையும் பற்றிப் பார்க்கின் உற்ற நாயேற்குக் குளம்பு அடி நீரும் அளப்பரும் தன்மைப் பிரளயச் சலதியும் ஒப்பினும் என்பதாகச்

சமமாகக் கூறினாலும் பட்டினத்தாருக்கு இவ்விரண்டனுள் கருதினாலும் ஒன்றைத் தேர்ந்து தெளிவதில் தம் ஞானத்தைப் பளிச்சிடச் செய்கிறார்.

அதாவது உலகவாழ்வு சிற்றின்பமானது; அடியார் வாழ்வோ பேரின்பமானது. இவ்விரண்டும் துறவறத்தார்க்கு விருப்பற்ற சமநிலையில் உண்மை உணர்த்தினாலும் இவ்வுண்மைக்கு மேலானதோர் உண்மையை அதாவது மெய்ம்மையைத் தேடும் பண்பைப் பட்டினத்தாரின் உவமையிலிருந்தே உணர முடிகிறது. உலக வாழ்வு தொண்டர் வாழ்வும் எவ்வாறு சமம் எனில் மாட்டின் கால் குளம்பில் நிற்கும் நீரும் விரிந்து பரந்த கடலின் நீரும் நீர் என்ற அளவில் ஒரே இயல்புடையதாயினும் அதாவது நீரால் ஒருபுடையான் ஒப்புமை உடையதாயினும் அளவில் வேறுபாடு உடையதைப் போல உலக இன்பத்தினும் அடியார்க்குச் செய்து மகிழும் தொண்டினையே உயர்ந்தது என்கின்றார் பட்டினத்தார்.

அதனால் தான் குளப்படி நீரும் (மாட்டின் குளம்பு) பிரளய நீரும் (கடல் நீர்) ஒப்பினும் அதாவது நீர் என்ற வகையில் ஒரோ வழி ஒப்புமை உடையதாயினும் அளவால் பயனால் வேறுபாடு உடையனவாகும் எனப்பட்டது. அடியார்க்குத் தொண்டு செய்வதை விவரிக்குங்கால் ஏவல் என்றால் தலையேற்றுச் செய்வேன் என்கிறார். அடியார்கள் காலால் இட்ட வேலையைத் தலையால் தட்டாமல் செய்வேன் என்கின்றார். பட்டினத்தார் ஆக அடியார்களுக்குக் குற்றேவல் செய்வதை அவர் விரும்பிய காரணம் பற்றிக் கூறும் போது அடியார்களின் நாதனாகிய மருதீசன் தன் நெஞ்சத்தே (பட்டினத்தாராகிய தன் நெஞ்சத்தில்) குடி கொண்டிருக்கும் அடியார்க்குச் செய்யும் தொண்டு ஆண்டவனுக்குச் செய்ததாகும் எனக் கூறுவதால் தான் என்கிறார். இக்கருத்தை நெஞ்சுக்கு நீதி கூறுவது போன்று கீழ்வரும் பாடலால் விளக்குகின்றார்.

*வந்திக்கண் டாய்அடி யாரைக்கண் டால்மற வாதுநெஞ்சே*
*சிந்திக்கண் டாய்அரன் செம்பொற் கழல்திரு மாமருதைச்*
*சந்திக்கண் டாய்இல்லை யாயின் நமன்தமர் தாம்கொடுபோய்*
*உந்திக்கண் டாய்நிர யத்துன்னை வீழ்த்திட உழக்குவனே.*

என் நெஞ்சே! முன் செய்த தவத்தால் சிவனடியாரைக் கண்டால் அவரைச் சிவன் என்றே கருது. அச்சிவனின் திருவடியை இடைவிடாது என்னு. அத்தகைய ஈசன் உறையும் இடைமருதில் தங்கி வணங்கு.

இவற்றை நீ செய்யாது போனால் எமனால் வாதனை அடைவாய் என்கின்றார் பட்டினத்தார்.

எனவே உலக வாழ்வையும் உன்னதமான அடியார் வாழ்வையும் உணர்ந்து தெளிந்து உலக வாழ்வினும் அடியார் வாழ்வே சிறந்தது என எண்ணுகின்றார் பட்டினத்தார். இப்பாடலில் உலக வாழ்வு ஆன்மீக வாழ்வு என்பதை விளக்கிய பட்டினத்தார் அடுத்து வரும் பாடலில் வாழ்வின் இரு கூறுகளை நல்வாழ்வு தீய வாழ்வு என்பது குறித்து விளக்குவதை அடுத்துக் காண்போம்.

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

## கள்ளாமை

(பிறர் பொருளை வஞ்சித்துக் கொள்ளாதிருத்தல்)

1. **எள்ளாமை வேண்டுவான் என்பான் எனைத்து ஒன்றும்
கள்ளாமை காக்கதன் நெஞ்சு.**

எள்ளாமை வேண்டுவான் என்பான் - பிறரால் இகழப்படக் கூடாது என்று விரும்புபவன்; எனைத்து ஒன்றும் - எந்த ஒரு பொருளையும்; கள்ளாமை - வஞ்சித்துக் கொள்ளாமை; காக்கதன் நெஞ்சு - தன் உள்ளத்தைக் காக்க வேண்டும்.

பிறரால் இகழப்படக் கூடாது என்று விரும்புபவன் எந்த ஒரு பொருளையும் கொள்ளக் கருதாது தன் உள்ளத்தைக் காக்க வேண்டும்.

2. **உள்ளத்தால் உள்ளலும் தீதே பிறன்பொருளைக்
கள்ளத்தால் கள்வேம் எனல்.**

உள்ளத்தால் உள்ளலும் தீதே - மனதால் கவர்ந்து கொள்ள நினைப்பதும் தீயதாகும். பிறன் பொருளை - பிறருடைய பொருளை; கள்ளத்தால் - வஞ்சகத்தால்; கள்வேம் எனல் - கைப்பற்றிக் கொள்ள நினைக்கக் கூடாது.

பிறருடைய பொருளை வஞ்சகத்தால் கைப்பற்றிக் கொள்ள நினைக்கக் கூடாது; அதனை மனதால் நினைத்தலும் தீயதாகும்.

**3. களவினால் ஆகிய ஆக்கம் அளவு இறந்து**
**ஆவது போலக் கெடும்.**

களவினால் ஆகிய ஆக்கம் - வஞ்சகத்தால் கொள்ளப்பெற்ற செல்வம்; அளவு இறந்து - அளவினைக் கடந்து; ஆவதுபோலக் கெடும் – வளர்வது போலத் தோன்றிக் கெட்டுவிடும்.

வஞ்சகத்தால் கொள்ளப்பெற்ற செல்வம் அளவினைக் கடந்து வளர்வதுபோலத் தோன்றிக் கெட்டுவிடும்.

**4. களவின்கண் கன்றிய காதல் விளைவின்கண்**
**வீயா விழுமம் தரும்.**

களவின்கண் - பிறர்பொருளை வஞ்சித்துக் கொள்ளுவதில்; கன்றிய காதல் - மிகுந்த விருப்பம்; விளைவின்கண் - அது பயனளிக்கும் போது; வீயா - நீங்காத; விழுமம் தரும் - துன்பம் தரும்.

பிறர் பொருளை வஞ்சித்துக் கொள்ளுவதில் ஏற்படும் மிகுந்த விருப்பம், அது பயனளிக்கும் போது நீங்காத துன்பத்தைத் தரும்.

**5. அருள்கருதி அன்புடையர் ஆதல் பொருள்கருதிப்**
**பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல்.**

அருள்கருதி - அருள் தன்மையை அறிந்து; அன்புடையர் ஆதல் - பிறரிடத்து அன்புடையவராக அமைதல்; பொருள் கருதி - பிறர் பொருளை விரும்பி; பொச்சாப்புப் பார்ப்பார்கண் இல் - பிறருடைய சோர்வினை எதிர் பார்ப்பவரிடம் இல்லை.

பிறருடைய பொருளை விரும்பி அவர் சோர்வினை எதிர்பார்த்திருப்பவரிடம் அருள் தன்மையை அறிந்து அன்புடையவராக அமைதல் என்பது இல்லை.

**6. அளவின்கண் நின்று ஒழுகல் ஆற்றார் களவின்கண்**
**கன்றிய காதல் அவர்.**

அளவின்கண் நின்று - பிற உயிர்களின் நிலையறிந்து நின்று; ஒழுகல் ஆற்றார் - ஒழுக மாட்டார்கள்; களவின்கண் - களவின் மீது; கன்றிய காதலவர் - மிகுந்த வேட்கை உடையவர்கள்.

களவின்மீது மிகுந்த வேட்கை உடையவர்கள் பிற உயிர்களின் நிலையறிந்து நிற்கும் நல்ல நெறியில் ஒழுக மாட்டார்கள்.

**7. களவு என்னும் கார்அறிவு ஆண்மை அளவுஎன்னும்**
**ஆற்றல் புரிந்தார்கண் இல்.**

களவு என்னும் கார்அறிவு - களவு எனப்படும் இருண்ட அறிவு; ஆண்மை - உடையவராதல்; அளவு என்னும் ஆற்றல் புரிந்தார்கண் - பிற உயிர்களை எண்ணுதலாகிய ஆற்றல் உடையவரிடத்தில்; இல் - இல்லை.

பிற உயிர்களைப் பற்றி எண்ணுகின்ற ஆற்றல் உடையவர்களிடத்தில் களவு எனப்படும் இருண்ட அறிவு உடைமை என்பது இல்லை.

**8. அளவுஅறிந்தார் நெஞ்சத்து அறம்போல நிற்கும்**
**களவுஅறிந்தார் நெஞ்சில் கரவு.**

அளவு அறிந்தார் - பிற உயிர்களைப் பற்றி அறிந்தவர்களின்; நெஞ்சத்து - உள்ளத்தில்; அறம் போல - அறம் நிலைபெற்றிருப்பது போல; நிற்கும் - நிற்கும்; களவு அறிந்தார் நெஞ்சில் கரவு - களவை எண்ணுபவர் நெஞ்சில் வஞ்சனை.

பிற உயிர்களைப்பற்றி அறிந்தவர்களின் உள்ளத்தில் அறம் நிலைபெற்றிருப்பது போலக் களவை எண்ணுபவர் நெஞ்சில் வஞ்சனை என்பது நிற்கும்.

**9. அளவு அல்ல செய்தாங்கே வீவர் களவு அல்ல**
**மற்றைய தேற்றா தவர்.**

அளவுஅல்ல - பிறரை அறியாது தீயவற்றை; செய்தாங்கே - செய்த பொழுதிலேயே; வீவர் - அழிந்துபடுவர்; களவு அல்ல - களவு தவிர்த்த; மற்றைய தேற்றாதவர் - பிற செயல்களை அறியாதவர்.

களவு தவிர்த்த பிற செயல்களை அறியாதவர்கள் பிறரை அறியாது தீயவற்றைச் செய்த பொழுதிலேயே அழிந்துபடுவர்.

**10. கள்வார்க்குத் தள்ளும் உயிர்நிலை கள்ளார்க்குத்**
**தள்ளாது புத்தேள் உலகு.**

கள்வார்க்கு - களவினை உடையவர்க்கு; தள்ளும் உயிர்நிலை - உயிர்நிற்றலும் தவறிவிடும்; கள்ளார்க்கு - களவு செய்யாதார்க்கு; தள்ளாது - தவறமாட்டாது; புத்தேள் உலகு - தேவர் உலகு.

களவினை உடையவர்க்கு உயிர்நிற்றலும் தவறிவிடும்; களவு செய்யாதார்க்குத் தேவர் உலகமும் தவறாது.

*(தொடரும்...)*

## மடாலய நிகழ்வுகள்

### 12, 132 விதைப் பந்துகள் செய்து சாதனை

05.02.2018 முதல் 11.02.2018 வரை கொறட்டி கிராமத்தில் கோவிலூர் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் நாட்டு நலப்பணித்திட்ட சிறப்பு முகாம் நடைபெற்றது. மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் தலைமை தாங்கினார். கல்லூரி முதல்வர். செல்லப்பா வரவேற்றார். அழகப்பா பல்கலைக்கழகத் தொலை தூரக்கல்வி இயக்குநர் டாக்டர். ராஜாராம் தொடங்கி வைத்தார். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் நிறைவுரை ஆற்றினார்.

இம்முகாமில் பங்கு பெற்ற மாணவர்கள் வேம்பு, புளி, புங்கை விதைகளைக் கொண்டு 12, 132 விதைப் பந்துகளைத் தயாரித்துச் சாதனை படைத்தனர். இவ்விதைப்பந்துகள் மூலம் காரைக்குடிப் பகுதியைப் பசுமைப் பகுதியாக மாற்றத் திட்டமிட்டுள்ளனர். மேலும் ஊருணி, தெருக்கள் சுத்தம் செய்தல், மருத்துவ முகாம், விளையாட்டுப் போட்டிகள் நடைபெற்றன. திட்ட அலுவலர் ஜெயராஜ், பேரா. மதுபாலா முகாம் ஏற்பாடுகளைச் செய்திருந்தனர்.

### கோவிலூர் மடாலயத்தில் பகவத்கீதை விளக்கம்

கோவிலூர் மடாலயத்தில் 4 நாட்கள் காலையில் உபநிஷதமும், மதியமும், பிற்பகலும் பகவத்கீதையின் 9ம் பாகமும் விளக்க உரை ஆற்றப்பட்டது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் விளக்க உரை தொடங்கப்பெற்றது. ரிஷிகேஷ் பூஜ்யஸ்ரீ ஸ்வாமி தயானந்த சரஸ்வதியின் சீடர் சாக்ஷாத்க்ருதயானந்த விளக்க உரை ஆற்றினார். இவர் சிறந்த வேதாந்த குருதேவர். ஆங்கிலம், தமிழ், சமஸ்கிருதம் நன்கு அறிந்தவர். ஆங்கிலத்திலும், தமிழிலும் சரளமாகப் பேசக்கூடிய இவர் நூற்றுக்கணக்கான வேதாந்தக் குருமார்களை உருவாக்கியவர். பலமுறை மூன்றாண்டு பாடத்திட்டத்தை ரிஷிகேஷிலும், கோவையிலும் நடத்தியவர்.

தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலிருந்து உரை கேட்பதற்கு ஆன்மீக அன்பர்கள் வந்திருந்தனர். 18,19,20 ஆகிய மூன்று நாட்களும் காலை 8.00 மணிக்கும் பகல் 11.00 மணிக்கும் மாலை 5.00 மணிக்கும் மூன்று வேளைகளில் நடைபெற்றது.

22.02.2018 - 23.02.2018 அன்று கோவிலூரில் உள்ள கோவிலூர் ஆண்டவர் விளையாட்டு மற்றும் உடற்கல்வியியல் கல்லூரியின் 11ஆம் ஆண்டு விளையாட்டு விழா கல்லூரி விளையாட்டுத் திடலில் நடைபெற்றது. கல்லூரியின் செயலர் கோவிலூர் ஆதீனம் சீர் வளர் சீர் மெய்யப்ப சுவாமிகள் போட்டிகளைத் தொடங்கி வைத்தார். உடற்கல்வியியல் கல்லூரி முதல்வர் டாக்டர். ரவீந்திரன் வரவேற்றார். தமிழ்நாடு விளையாட்டு மற்றும் உடற்கல்வியியல் பல்கலைக்கழகத்தின் முன்னாள் துணைவேந்தர் டாக்டர். மூர்த்தி உரையாற்றி வெற்றி பெற்றவர்களுக்குப் பதக்கங்களையும் கோப்பைகளையும் வழங்கினார். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாகடர். குமரப்பன் வாழ்த்துரை வழங்கினார். மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் மாயாண்டி, திருமதி. மணிமொழி மோகன் கலந்து கொண்டனர்.

24.02.2018 அன்று நடைபெற்ற இலக்கியப்பூங்கா நிகழ்ச்சியில் கோச்செங்கணான், திருநீலகண்ட யாழ்ப் பாணர், சடையர், இசைஞானியார் ஆகிய அடியார்கள் பற்றிப் பேராசிரியர் அன்பு மெய்யப்பன் சொற்பொழிவாற்றினார்.

02.03.2018 அன்று கோவிலூரில் உள்ள நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி ஆண்டுவிழா நடைபெற்றது. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் ஆசிஉரை வழங்கினார். கணிதத்துறைத் தலைவர் பேரா. மங்கையர்க்கரசி வரவேற்றார். கல்லூரி முதல்வர் டாக்டர். செல்லப்பா ஆண்டறிக்கை வாசித்தார். சாகித்திய அகாதமியின் சென்னை மேலாளர் ஏ.எஸ்.இளங்கோவன்

கல்லூரி நாள் விழா உரை ஆற்றினார். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் வாழ்த்துரை வழங்கினார். சென்னை பச்சையப்பன் கல்லூரி மேனாள் தமிழ்ப் பேராசிரியர் ம.ரா.அரசு உரையாற்றி மாணவர்களுக்குப் பரிசுகளை வழங்கினார். கணினித்துறைத் தலைவர் டாக்டர். கலா, வணிகவியல் துறைத்தலைவர் பேரா.சீதாலட்சுமி சிறப்பு விருந்தினர்களை அறிமுகம் செய்து வைத்தனர். ஆங்கிலத் துறைத்தலைவர் பேரா. மாணிக்கம் நன்றி உரை ஆற்றினார். கல்லூரி விஸ்காம் துறை மாணவர்கள் தயாரித்த குறும்படம் திரையிடப்பட்டது. மாணவ மாணவிகளின் கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் முதல்வர்கள் டாக்டர். ரவீந்திரன், மாயாண்டி, திருமதி. மணிமொழி மோகன், திருமதி. மணிமொழிமுருகன், கோவிலூர் முன்னாள் ஊராட்சித் தலைவர் டி.ஆர்.எம். அழகப்பன், முல்லைப்பதிப்பகம் பழனி, கவிஞர் முத்துசண்முகம் ஆகியோர் பங்கு பெற்றனர்.

### கோவிலூர் உடற்பயிற்சிக் கல்லூரி ஆண்டுவிழா

03.03.2018 அன்று கோவிலூரில் உள்ள கோவிலூர் ஆண்டவர் விளையாட்டு மற்றும் உடற்பயிற்சிக் கல்லூரியின் 11வது ஆண்டு விழா கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்றது. பேரா. ஆனந்தராஜ் வரவேற்றார். கல்லூரி முதல்வர் டாக்டர். ரவீந்திரன் ஆண்டறிக்கை வாசித்தார். பேரா.மா.ரா. அரசு, சாகித்ய அகாதமி சென்னை அலுவலக அலுவலர் இளங்கோவன் ஆகியோர் பேசினர். கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் வாழ்த்துரை வழங்கினார். திருச்சியில் நடந்த காவேரி மராத்தான் போட்டியில் முதலிடம் பெற்று 5000ரூ. ரொக்கப்பரிசும் திருச்சியில் நடந்த மினிமராத்தான் போட்டியில் முதலிடம் வந்து 7000ரூ ரொக்கப்பரிசும், சென்னையில் ரிகிரீன் மராத்தான் போட்டியில் முதலிடம் பெற்று ரூ.10,000 ரொக்கப்பரிசும்

அக்னிச்சிறகுகள், எஸ்.எஸ். கோட்டை, பெரம்பலூர் மதுரை காமராஜர் பல்கலைக்கழக மினிமராத்தான் போட்டிகளில் பங்கு பெற்று முதலிடம் பெற்று கோப்பைகளையும் ரொக்கப்பரிசுகளையும் பெற்றுக் கல்லூரிக்குப் பெருமை சேர்த்த II B.P.Ed., மாணவர் பட்டாணி பரிசு வழங்கிப் பாராட்டப்பெற்றார். மேலும் மாநில, மாவட்ட, நகர அளவில் வெற்றி பெற்ற வீரர், வீராங்கனைகள் பாராட்டப் பெற்றனர். ஆசிரியர், அலுவலர்களுக்கு நினைவுப் பரிசு வழங்கப்பெற்றது. மாணவ மாணவிகளின் சிலம்பாட்டம், கரகாட்டம், மைமிங் மற்றும் பல கலை நிகழ்ச்சிகள் நடைபெற்றன. பேரா.சரவணன் நன்றி கூறினார். பேரா. விமலாதேவி நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கினார். முல்லைப் பதிப்பகம் பழனி, முதல்வர்கள் மாயாண்டி, திருமதி. மணிமொழி மோகன் ஆகியோர் பங்கு பெற்றனர்.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### கால் மாறி ஆடியது

உரிய காலத்தில் விக்கிரம பாண்டியன் தனது ஆட்சிப் பொறுப்பைத் தன் மகன் ராஜசேகரனிடம் தந்துவிட்டுச் சில நாட்கள் சென்றபின் சிவலோகம் சென்றான். மகுடம் சூடிய ராஜசேகர பாண்டியன் செம்மையாகக் கோல் நடத்தி உலகைப் பாதுகாத்து வந்தான். மொத்தம் உள்ள அறுபத்து நான்கு கலைகளில் அறுபத்துமூன்று கலைகளையும் கற்றுத் தேர்ந்து அவற்றில் வல்லவன் ஆனான். அறுபத்துநான்கு கலைகளுள் ஒன்றான பரதசாஸ்திரம் மாத்திரம் கற்றுக் கொள்ளவில்லை; ஏனென்றால், வெள்ளியம்பல நடராஜப் பெருமானுக்குப் பாண்டியன் காட்டி வந்த பத்தியே காரணம்.

ராஜசேகர பாண்டியன் காலத்திலே சோழ நாட்டைக் கரிகால் பெருவளத்தான் என்ற புகழ் பெற்ற மன்னவன் ஆண்டுவந்தான். அறுபத்து நான்கு கலைகளையும் தெள்ளத் தெளியக் கற்று அறிவில் சிறந்து விளங்கினான். ஒருமுறை சோழனது ஆஸ்தான வித்வான்

ஒருவன் பாண்டியனைக் காண வந்தான். பேச்சோடு பேச்சாக, தென்னவரே ! எமது சோழ மன்னர் அறுபத்து நான்கு கலைகளிலும் வல்லவர். தங்களுக்குப் பரதம் வராது; ஆதலால் தாங்கள் சகலகலா வல்லவர் அல்லர் என்று சொன்னான். சோழப் புலவன் கூறிய சொற்கள் பாண்டியன் உளத்தைப் புண்படுத்தின. சிவபெருமானது திருநடனத்தைச் சிறியேனும் ஆடிப்பயிலவேண்டுமோ? சொக்கநாதர் திருவுள்ளம் இதுவே போலும் என எண்ணலானான். ஆடலில் ஆசை கொண்ட பாண்டியன் பரதநாட்டிய சாஸ்திரத்திலே மிகவும் தேர்ச்சியும் அனுபவமும் கொண்ட தக்க ஆசிரியர்களை வரவழைத்தான். அவர்கள் மனம் மகிழும் படிக்கு ஆடை, ஆபரணம், பொன், மணி முதலியவற்றைக் கொடுத்தான். சாஸ்திரத்தை வரன்முறையாக நிரம்ப அக்கறையுடன் கற்றுக்கொண்டான். நவரஸங்களையும், மெய்ப்பாடுகள் பத்தினையும், அபிநய வகைகள் இருபத்துநான்கையும், எல்லா வகையான ராகங்களையும், ஏழு வகைத் தானங்களையும் நன்றாகக் கற்றுத் தேர்ந்து விட்டான் ராஜசேகர பாண்டியன்.

பரதநாட்டியப் பயிற்சி செய்யும்போது தனது உடலிலே வலியும் சோர்வும் ஏற்படுவதை உணர்ந்தான். உடனே அவனது சிந்தை வெள்ளியம்பலத்துள்ளே திருக்கூத்தாடும் நடராஜப்பெருமான் பால் சென்றது. ஆஹா ! இப்படிப்பட்ட வலியும் அயர்ச்சியும் நடராஜப் பெருமானுக்கும் ஏற்படுமே ! பெருமானின் திருவடிகளுள் ஒன்றுதானே பல நாட்களாக ஆடியபடி நின்று கொண்டிருக்கிறது. நான் இதைப் பொறுத்துக்கொண்டிருப்பதா? அவருடைய திருவடி வருந்துமே என்று பல வகையாக எண்ணிக் கவலைப்பட்டான்.

துணிந்த மனம் உடையவனாகி எழுந்து சென்று திருக்கோயிலினை அடைந்தான். அன்று சிவராத்திரிப் புனித நன்னாள். சோமசுந்தரப்பெருமானுக்கு சிவாகமவிதிப்படி நான்கு ஜாமங்களிலும் பூஜை செய்தான். பின்னர் வெள்ளியம்பலத்திலே

நடராஜப்பெருமானது திருநடனத்தைத் தரிசனம் செய்து மகிழ்ந்து வணங்கினான். ஆனந்த பாஷ்யம் பெருகக் கைகளைச் சிரமேல் கூப்பி, நடராஜப் பெருமானே ! பதித்த திருவடியை மேலே, தூக்கியருள வேண்டும் எளியேன் காணும் படிக்குக் கால் மாறி நடனம் புரியவேண்டும் அடியேனது வருத்தத்தைப் போக்கி அருளவேண்டும். இல்லையேல் இறப்பேன் என்று விண்ணப்பித்தான். பிறகு சிவ சந்நிதானத்திலே தனது வாளை நாட்டி அதன் மேலே விழ ஆயத்தமானான். பாண்டியனது சங்கல்பத்தை உணர்ந்து நடராஜப்பெருமான், அன்பெனும் பிடியுள் அகப்படும் மலையாம் கூத்தப்பன், மனம் கனிந்தார். உடனே தமது இடது பாதத்தை நிலத்திலே பதித்து வலது பாதத்தை மேலே எடுத்துக் கால் மாற்றி நடனம் செய்து அருளினார். பாண்டியனது கவலை வருத்தம் ஆனவற்றையும், ஆணவம், கன்மம், மாயை ஆன மும்மலங்களையும் போக்கி அவனைப் பேரின்ப வாரிதியில் முழுக்காட்டினார். தனது உளம், சொல், உடம்பு மூன்றையும் சிவனாருக்கே உரிமைப் படுத்தி, பக்திமய மாகித் தோத்திரம் செய்யலானான் ராஜசேகரன்.

வெள்ளிமன்றப்பெருமானே ! கால் மாறி ஆடிய இந்த அற்புதத் திருநடனத்தை எல்லாரும் கண்டு தரிசனம் செய்யும்படி, எம்பெருமான இப்படியே நின்றிருந்து அருள்புரியவேண்டும் என்று வேண்டிக்கொண்டான். பாண்டியன் வேண்டியபடியே நடராஜப் பெருமான் வெள்ளிமன்றிலே கால்மாறி ஆடிய திவ்யகோலம் காட்டி அருள்வாரானார்.



## வானம்

(கவிஞர். ம. கார்மேகம்)

(31.01.2018 அன்று மடாலய 200ஆவது ஆண்டு நிறைவுவிழாக் கவியரங்கில் பாடிய கவிதையில் ஒரு பகுதி)

வானிருக்கும் மழைபெய்ய வில்லை என்றால்
வளமிருக்கும் நிலமெல்லாம் வறண்டு போகும்;
மீனிருக்கும் நீரெல்லாம் வற்றிப் போகும்;
மேலிருக்கும் காற்றெல்லாம் வெப்பம் ஆகும்;
கானிருக்கும் மரமெல்லாம் நெருப்புப் பற்றும்;
கடவுளருள் இருந்தால்தான் வாழும்; ஈசன்
தானிருக்கும் ஓசையினைக் கொண்ட வானம்
தானிருக்கும் வரையினில்தான் உலகம் வாழும்!

வானத்தின் வழியாக அனுமன் சென்றான்
வனத்திருந்த சீதையது வாட்டம் தீர்த்தான்;
வானத்தின் அசரீரி வார்த்தை யாலே
பரதனது துயர்தீர்த்தான் அண்ணன் ராமன்;
வானத்தின் பலம்மட்டும் வாலி கொண்ட
வலிமைக்குச் சேர்க்கவில்லை கம்ப நாடன்;
வானத்தின் வலிமையதும் சேர்ந்தி ருந்தால்
வாலிவதை நிகழாது என்றே விட்டான்!

இத்தனைக்கும் கவலையின்றித் தேவர் மட்டும்
இருக்கின்றார் முப்பத்து மூன்று கோடி;
எத்துணையும் எண்ணிக்கை கூட வில்லை
என்பதனால் இங்குள்ளோர் வானம் செல்லப்
புத்தியுடன் முயல்கின்றார்; உயர்ந்த வானம்
புரிகின்ற அருட்செயலால் மட்டும் கிட்டும்;
சத்தியமாய் அறம்செய்வோர் வானம் செல்வார்
தக்கதொரு நற்சாட்சி நாச்சி யப்பர்!

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**